பகவத் பாதை

Bagavath Path
தனிச்சுற்றுக்கு மட்டும் இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு 15-01-2013

# கற்பு நெறி

- ஸ்ரீ பகவத்



புத்தி மட்டுமே நமக்குக் கட்டுப்பட்டது. மனம் தேவையானதையும் காட்டும்; தேவையற்றதையும் காட்டும். அதை குறை கூற முடியாது. அலைபாய்ந்து கொண்டிருப்பது தான் அதன் இயல்பு.

– ஸ்ரீ பகவத்



வெளிநாட்டிலிருந்து அன்பர் ஒருவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசினார்.

"எனக்கு மனைவி, குழந்தைகள் இருக்கிறார்கள். எனது மனைவி அழகானவள். அவள் என்மீது மிகவும் அன்பு காட்டி வருகிறார். ஆனால் எனக்குத்தான் தேவை இல்லாமல் அவரது நடத்தை மீது சந்தேகம் ஏற்படுகிறது. அவள் எந்த ஆணுடன் பேசினாலும் தவறாக நினைக்கத் தோன்றுகிறது. சரியாக ஆய்வு செய்து பார்க்கும்போது அப்படி எதுவும் கிடையாது என்று தெரிந்து கொள்கிறேன்....

"ஆனால் இப்படி அடிக்கடி சந்தேகப்பட்டு, பலமுறை அந்த வேதனையின் காரணமாக, தற்கொலை முயற்சிகளில் கூட ஈடுபட்டுவிட்டேன். இண்டர்நெட்டில் உங்களது கருத்துக்களைத் தெரிந்துகொண்ட நிலையில், நான் ஓரளவு எனது பிரச்சினைகளிலிருந்து விடுபட்டுவிட்டேன். ஆனாலும் அடிக்கடி என் மனது இப்படித்தான் சந்தேகப்பட்டு வருகிறது. இதிலிருந்து நான் எப்படி விடுபடுவது?"

- அவர் தனது பிரச்சினையைக் கூறித் தீர்வு கேட்டார்.

இந்நிலையில் அவரிடம் அதுபற்றி உரையாட நேர்ந்தது.

"உணர்ச்சிகளைப் பொறுத்த அளவில், ஆண், பெண் என்ற பேதம் கிடையாது. ஆண்களுக்குள்ள அதே உணர்ச்சிகள் பெண்களுக்கும் இருப்பதுதான் இயற்கை. ஒரு சமுதாயத்தை எடுத்துக்கொண்டால், ஆண்கள் எப்படி வேண்டுமானாலும் இருந்து கொள்ளலாம்; ஆனால் பெண்கள் மட்டும் ஒழுக்கமுடையவர்களாக இருக்கவேண்டும் என்பதுபோல் சித்திரிக்கப்பட்டுவிட்டது...

"மனிதர்களின் செயலைப் பிரதிபலிப்பதைப்போல் கடவுள் சம்பந்தப்பட்ட புராணக்கதைகள், உற்சவங்கள் கூட அமைந்துள்ளன. முருகன் கோவிலில் நடைபெறும் திருவிழாக்களில் ஒன்று இவ்வாறு கூறப்படுகிறது. முருகன் பரத்தையர் வீட்டுக்குச் சென்று வந்ததாகவும், அதைத் தெரிந்து கொண்ட முருகக் கடவுளின் மனைவி ஊடல் கொண்டதுபோலவும் ஒரு திருவிழா காட்டப்படும்...

"இலக்கியங்கள் பலவற்றிலுங்கூட தலைவன், தலைவியைப் புறக்கணித்து பரத்தையரை நாடியதாகவும், பிறகு மனந்திருந்தி, தலைவியிடம் திரும்பியதாகவும் கூறப்படும். இதேபோன்று தலைவி நடந்துகொண்டால்? தலைவன் அவளை ஏற்றுக்கொள்வானா? ஆணுக்கும் பெண்ணுக்கும் உணர்ச்சிகள் பொதுவானது. ஆனால் கற்பு நெறி மட்டும் பொதுவாக இல்லை. அது பெண்ணுக்கு மட்டுமே கொடுக்கப்படுகிறது".

- இப்படி அவரிடம் கூறிவிட்டு அவரிடம் ஒரு கேள்வியைக் கேட்டேன்.

"ஆண்கள் சபல புத்தி உடையவர்களாக இருக்கிறார்கள். அவர்களில் பலர் சமுதாயத்தில் பெயர் கெட்டுவிடக்கூடாதே என்று கட்டுப்பாடாக இருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய மனதில் சபலம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. ஆண்களுக்குள்ள அதே உணர்வு பெண்களுக்கும் இருக்கத்தானே செய்யும்? அதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

- இவ்வாறு கேட்டதும் அவர் பதில் கூறினார்.

"ஆண்களுக்கு இருப்பதுபோல், பெண்களுக்கும் சபல உணர்வு இருப்பதுதான் இயற்கை என்று தோன்றுகிறது".

இது எந்த அளவில் உண்மை? கற்பு நெறி என்பது என்ன?

ஒரே சூழ்நிலையில் வாழ்ந்தவர்கள், ஒரு மாற்றம் தேவைப்பட்டு சுற்றுலா செல்கின்றனர்.

இப்படி அனைத்திலும் மாற்றம் தேவைப்படுகிறதா? இதுதான் சபல புத்தியா?

கற்பு நெறி என்பது ஒரு சமுதாய ஒழுக்கம். இது இயற்கை என்று கூறிவிடமுடியாது. இது இயற்கையாக இருக்கும் பட்சத்தில்

உயிரினங்கள் அனைத்திடமும் இந்த கற்பு நெறி இருந்திருக்க வேண்டும்.

ஆனால் அப்படி இல்லை. அப்படியானால், கற்புநெறி என்பது ஒரு கற்பிதமா? நாமாக ஏற்படுத்திக்கொண்ட ஒரு ஏற்பாடா?

கற்பு நெறி என்ற கருத்தை ஆய்வு செய்வதன் மூலம், நம் மனதின் செயல்பாட்டையும், இன்னுமொரு கோணத்தில் ஆய்வு செய்யப்போகிறோம்.

இராமகிருஷ்ண பரமஹம்சர் காமகாஞ்சனத்தைத் துறக்கவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவார். காமம் என்னும் பெண்ணாசையையும், காஞ்சனம் எனும் பணத்தாசையையும் துறக்கவேண்டுமென்றும், அவை இரண்டும் தான் நம்மைக் கட்டிப்போடும் மாயை என்றும் கூறுவார்.

எவராவது அவரது கையில் பணத்தைக் கொடுத்தால், அவர் பதறித் துடித்துவிடுவார்.

இது விவேகானந்தருக்குப் பிடிக்கவில்லை. "பணம் வேண்டாமென்றால், வேண்டாமென்று கூறிவிடவேண்டியதுதானே? பணத்தைத் தொட்டால் ஏன் இப்படி தீயைத் தொட்டது போல் பதறவேண்டும்? தேவையில்லாத ஆர்ப்பாட்டத்தில் ஏன் இப்படி ஈடுபடவேண்டும்?" - என்று கேட்டு வந்தார்.

"என்னால் அதனைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை" என்று இராமகிருஷ்ணரும் கூறிவந்தார்.

இராமகிருஷ்ணரின் கூற்று விவேகானந்தருக்கு நம்பிக்கையைத் தரவில்லை. அதை சோதித்துவிடுவது என முடிவு செய்து, இராமகிருஷ்ணர் இல்லாத நேரமாகப் பார்த்து இராமகிருஷ்ணருடைய படுக்கையின் அடியில் பணத்தை மறைத்து வைத்துவிட்டார்.

எதுவும் தெரியாத நிலையில் இராமகிருஷ்ணர் படுக்கையில் அமர்ந்ததும் தேள்கொட்டியதைப்போல் பதறிப்போய் எழுந்துவிட்டார். அவருடைய உடலே பணத்தால் பாதிக்கப்பட்டுவிட்டது.

இராமகிருஷ்ணருக்கு என்ன நேர்ந்தது?

நம் மனதை, அது செயல்படும் தன்மையைப் பொறுத்து நான்கு பகுதியாகப் பிரித்துள்ளார்கள்.

நம் மனதின் அலைபாயும் தன்மையுடைய பகுதியை மனம் என்றும்

தீர்மானிக்கும் பகுதியை புத்தி என்றும்

நம்முடைய இயல்பை சித்தம் என்றும்

நமது அனுபவங்களை அகங்காரம் என்றும்

- நான்கு பகுதியாகப் பிரித்துள்ளார்கள்.

விடுமுறைக்கு ஊட்டிக்குச் செல்வதா, வெளிநாடு செல்வதா, வீட்டில் புதிதாக ஒரு பகுதியைக் கட்டுவதா என நம்முடைய மனம் பலவற்றைக் காட்டுகிறது. இதில் ஏதாவது ஒன்றைத்தான் செய்யமுடியும்.

ஊட்டிக்குச் செல்வது என முடிவு செய்கிறோம். இப்படி முடிவு செய்வதுதான் புத்தி.

இப்படி நாம் முடிவு செய்த நிலையில், அது பற்றி மேலும் சிந்திக்கவும், செயல்பட நினைப்பதுமாக இருந்து வருகிறோம்.

நமது புத்தியின் செயல்பாடு, சித்தத்தை அடைந்து விடுகிறது. புத்தியின் முடிவை சித்தமும் அங்கீகரித்து விடுகிறது.

இந்நிலையில் ஊட்டியைப் பற்றி எவர் உயர்வாகக் கூறினாலும் நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஊட்டியைப் பற்றி எவர் இழிவாகக் கூறினாலும் நமக்குக் கோபம் வந்து விடுகிறது.

இப்படித்தான் நம்மில் சிலர் குடிப்பழக்கத்துக்கு அடிமையாகி இருப்போம்.

அதனால் பலவிதமான பிரச்சினைகள் ஏற்படுவதால், குடியை விட்டுவிட முடிவு செய்து குடிப்பதை நிறுத்திவிடுவோம்.

திடீரென ஒருநாள் நண்பர் ஒருவர் மது பார்ட்டிக்கு நம்மை வரவேற்பார்.

நமது மனம் “மதுவைக் குடிக்கக்கூடாது” என்று சொல்லும். பிறகு அதே மனம், ‘இன்று ஒரு நாள் மட்டும் குடித்தால் என்ன?’ என்று கூறும். இந்நிலையில்

‘குடிக்கவேண்டாம்’ என நமது புத்தி முடிவெடுத்துவிட்டால்

அத்துடன் அந்தப் பிரச்சினை முடிவடைந்துவிடும்.

அவ்வாறில்லாமல், நமது புத்தியும் ‘இன்று ஒரு நாள் மட்டும் குடித்தால் என்ன?’ என்ற இரண்டாவது கருத்தை அங்கீகரிக்குமேயானால்

நமது உடலிலுள்ள உணர்ச்சி நரம்புகளும் மதுவைக் கேட்க ஆரம்பித்துவிடும்.

இதனால் நம் சித்தத்திலுள்ள இயல்பும் உடல் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுக்குமேயானால்

நாம் மீண்டும் மதுவின் பக்கம் சென்றுவிடுவோம்.

நமது சித்தம் என்பது நமது அடிமனது. - நமது Subconscious Mind.

நமது சித்தம் நமது நேரடிக் கட்டுப்பாட்டுக்குள் உள்ளதன்று.

புத்தி மட்டுமே நமக்குக் கட்டுப்பட்டது. மனம் தேவையானதையும் காட்டும்; தேவையற்றதையும் காட்டும். அதைக் குறை கூறமுடியாது. அதன் இயல்புதான் அது. அலைபாய்ந்து கொண்டிருப்பதுதான் அதன் இயல்பு.

தீர்மானிப்பது அனைத்தும் புத்தியின்பாற்பட்டது. புத்தி மட்டுமே நமது கைகளில் உள்ளது.

நமது புத்தி "மது வேண்டாம்; அது நல்லதல்ல" என்று தீர்மானித்துவிட்டால் அது நமது நரம்பு மண்டலங்களைத் தூண்டி மதுவைக் கேட்க வைக்காது.

இந்நிலையில் நம்மை மது அருந்துமாறு கட்டாயப்படுத்துகிறார்கள் என வைத்துக்கொள்வோம்.

அது நமது புத்தியை மாற்றி மதுவை ஏற்க நினைத்தோமானல்

நரம்பு மண்டலங்கள் தூண்டப்பட்டு மதுவின் மீதுள்ள ஈடுபாடு அதிகரித்துவிடும்.

நண்பர்கள் வற்புறுத்திய நிலையிலும் நமது புத்தியின் முடிவு மதுவேண்டாம் என இருந்தால் என்ன நடக்கும்?

நண்பர்கள் மதுவை அருந்த நிர்பந்திக்கிறார்கள். நமது புத்தி அதற்கு இடம் கொடுக்கவில்லை.

இந்நிலையில் நமது இயல்பிலுள்ள கோபம் - நமது சித்தத்திலுள்ள கோபம் வெளிப்பட்டு நமது புத்திக்கு உதவி செய்ய முயலும். அல்லது நமது சித்தத்திலுள்ள பயம் வெளிப்பட்டு புத்திக்கு உதவி செய்யும். கோபம் ஏற்பட்டால் நண்பர்களுடன் சண்டையிட்டு நாம் நம்மைக் காப்பாற்றிக்கொள்வோம்.

கோபத்துக்குப் பதிலாக பயம் ஏற்படுமேயானால் நாம் நமது நண்பர்களிடமிருந்து தப்பியோடி நம்மைக் காப்பாற்றிக் கொள்வோம்.

நாம் தப்பிக்கமுடியாத நிலையில், நமது கோபத்தையோ, பயத்தையோ பொருட்படுத்தாமல், நமது நண்பர்கள் வன்முறையைக் கையாண்டு நமக்கு மதுவை ஊட்டிவிட்டதாகவே வைத்துக்கொள்வோம்.

அப்போது என்ன நடக்கும்?

நமது சித்தம் நண்பர்கள் மீது எதிர்ப்புணர்ச்சியையும் வன்மத்தையுமே உமிழ்ந்து கொண்டிருக்கும்.

மற்றவர்கள் நம்மைக் கட்டாயப்படுத்துந்தோறும், நமது சித்தம் எதிர்ப்புணர்ச்சியையே வெளிப்படுத்திக் கொண்டிருக்கும். அந்த எதிர்ப்புணர்ச்சி, நண்பர்கள் மீதும், நண்பர்கள் நமக்குக் கொடுக்க நினைத்த மதுவின்மீதும் உள்ள எதிர்ப்பாகவே நமது சித்தத்தில் பதிவாகிவிடும்.

நமது புத்தி, நண்பர்களின் விருப்பத்துக்கு ஒத்துழைப்பு கொடுக்குமேயானால் சித்தத்தில் எந்தவிதமான எதிர்ப்புணர்வும் ஏற்படாது. அதனால் மதுவுக்கு எதிரான பதிவுகள் எதுவும் சித்தத்தில் ஏற்படாமல் போய்விடும். மதுவுக்கு சாதகமான பதிவுகள் மட்டுமே ஏற்பட்டு நரம்பு மண்டலங்களையும் செயல்பட வைத்துவிடும்.

இராமகிருஷ்ண பரமஹம்சரின் புத்தி பணத்தை முழுமையாக நிராகரித்து விட்டதால் அந்த முடிவு சித்தத்திலும் பதிவாகி விட்டது.

சித்தத்திலுள்ள பதிவுகளுக்குத் தகுந்த அனுபவங்களே நமக்கு ஏற்படும். இராமகிருஷ்ண பரமஹம்சரின் சித்தத்திலுள்ள பதிவின் தீவிரத்தின் காரணமாக அவர் அறியாத நிலையிலேயே அவரது நரம்பு மண்டலங்கள் பணத்துக்கு எதிராகச் செயல்பட ஆரம்பித்துவிட்டிருக்கின்றன.

ஆனால் சித்தம் நமது எல்லைக்குள்ளும், கட்டுப்பாட்டுக்குள்ளும் கிடையாது. புத்தி மட்டுமே நமது எல்லைக்குட்பட்டது.

நமது புத்திக்கு ஏற்பவே நமது இயல்பு மாறியமைந்துவிடும்.

ஒருவர் நிரந்தரக் குடிகாரராக இருக்கிறார் என வைத்துக்கொள்வோம். அந்நிலையில் மதுவை விரும்பும் இயல்பு அவரது சித்தத்தில் பதிவாகித்தான் இருக்கும். அப்படிப் பதிவாகிக் கிடக்கும் மதுவை விரும்பும் இயல்பு

தாமாக செயலுக்கு வராதா?

நம்மையறியாத நிலையில்தான் அவை தமது உணர்வுகளை வெளியே கொண்டு வரும். அவை எவ்வாறாக இருந்தாலும்

அது நமது புத்தியின் சுதந்திரமான செயல்பாட்டுக்கு இடையூறாக அமைவதில்லை.

ஒருவர் நிரந்தரக் குடிகாரராக இருந்தாலுங்கூட

'குடிக்கவேண்டாம்' என அவருடைய புத்தி முடிவெடுத்த நிலையில்

சித்தத்தில் பதிவாகிக் கிடக்கும் 'குடிக்கும் இயல்பு' அவரைத் தொந்தரவு செய்யாது.

அவரது புத்தி, எப்போது குடிப்பதற்கு ஆதரவாக முடிவெடுக்கிறதோ, அப்போது தான் அவரது குடிக்கும் இயல்பும் அவருடைய முடிவை அங்கீகரித்து

குடிக்கவேண்டும் என்ற வேட்கையைத் தீவிரப்படுத்திவிடும்.

புத்தியில் நாம் எடுக்கும் முடிவுகள், தொடர்ந்து நல்ல முடிவாகவே இருக்கும் பட்சத்தில்

நமது அனுபவங்களும்

நல்ல அனுபவங்களாகவே இருக்கும்.

நமது அனுபவங்கள் தாம்

நமது சித்தத்தில் பதிவாகி

நமது இயல்பாகிவிடுகின்றது.

கற்புநெறி பற்றி விவாதித்து வந்தோம்.

இயற்கைப் படைப்பில் கற்பு நெறிக்கான வாய்ப்பு இல்லை.

ஆனால் நாகரிகத்தின் மேம்பாடு ஏற்பட்ட நிலையில் நமது செயல்கள் அனைத்தும் முறைமைப் படுத்தப்பட்டுவிட்டன.

எதை நாம் செய்தால் நமக்கும் நல்லது, மற்றவர்களுக்கும் நல்லது, சமுதாயத்துக்கும் நல்லது?

- என்ற நிலையில், நமது செயல்பாடுகள் அனைத்தும் முறைமைப் படுத்தப்பட்டுவிட்டன.

கற்புநெறி எதற்காக முக்கியத்துவம் பெற்ற ஒன்றாகக் கருதப்படுகிறது?

சமுதாயம் என்பது குடும்பங்களால் ஆக்கப்பட்டது. ஒவ்வொருவரும் தன்னந்தனியான நபராகச் செயல்படுவாரேயானால் அங்கே குடும்பம் என்று எதுவும் இருக்காது.

குடும்பங்களே இல்லாத சமுதாயம் சமுதாயமே அல்ல.

ஒரு குடும்பத்தை எடுத்துக்கொண்டால், கணவன், மனைவி மற்றும் குழந்தைகள் ஆகியோரே அதன் உறுப்பினர்கள்.

அவர்களில் கணவனும் மனைவியும் வயதுவந்த நிலையிலேயே இணைகிறார்கள் அல்லது சேர்த்து வைக்கப்படுகிறார்கள்.

ஆனால் குழந்தைகள் அப்படி அல்ல.

அவர்கள் புதிதாகவே உலகத்துக்கு அறிமுகம் ஆகிறார்கள்; ஒரு குடும்பத்தில் உதயமாகிறார்கள்.

ஒரு குழந்தை பிறக்கிறது. அந்தக் குழந்தையினுடைய தாய் யார்?

குழந்தையினுடைய தாய் யார் என்பதில் எவருக்கும் எந்த சந்தேகமும் ஏற்பட வாய்ப்பு கிடையாது. ஏனெனில் ஒவ்வொரு குழந்தையையும் ஒரு தாய்தான் பெற்றெடுத்தாகவேண்டும்.

ஒரு குழந்தையின் தந்தை யார்?

கணவனுடைய தொடர்பினால் மட்டுந்தான்குழந்தை ஏற்படவேண்டுமென்ற கட்டாயம் இல்லை. எந்த ஒரு ஆண்மகனும் குழந்தை ஏற்படுவதற்குக் காரணமாக முடியும்.

படைக்கும் பொறுப்பிலுள்ள ஒரு தாயானவள், தனது கணவனோடு மட்டும் தொடர்பில் இருந்தால்தான் அந்த குழந்தைக்கு தந்தை யார் என்பது தெரியும்.

ஒரு குடும்பத்திலுள்ள குழந்தைக்கு, தாய் யார், தந்தை யார் என்பதில் நிச்சயமான தன்மை இருந்தால் மட்டுமே அது ஒரு குடும்பமாக இருக்கமுடியும். குழந்தையின் தந்தை யார் என்பது உறுதி செய்யப்படும்.

ஆகவே ஒரு குடும்பத்தின் ஆணிவேறே ஒரு தாயினுடைய கற்புத் தன்மையில் தான் மையங்கொண்டுள்ளது.

இதுவே நமது குடும்பப் பாரம்பரியமாகவும், சமுதாயப் பாரம்பரியமாகவும், நாகரிகத்தின் அடையாளமாகவும் கருதப்படுகிறது.

ஒரு தாயினுடைய புத்தியும், நாகரிகத்தின் அம்சமாக கற்பு நெறியை ஏற்றுக்கொள்கிறது.

இதனால் தாயினுடைய இயல்பும் - சித்தமும் அதற்கேற்ற வகையிலேயே வடிவமைக்கப்பட்டுவிடுகிறது.

ஒரு தாயைப் பொருத்த அளவில் கற்பு நெறி தவறுவதைவிட கற்பு நெறியோடு வாழ்ந்திடுவது

இயல்பாகவும் உள்ளது;

எளிதாகவும் உள்ளது.

கற்புநெறியிலிருந்து விலகுவது தான் அவர்களுக்கு கடினமானது.



## உங்கள் சந்தாவை செலுத்திவிட்டீர்களா?

நமது வேண்டுகோளுக்கு இணங்க சந்தா செலுத்தியவர்களின் எண்ணிக்கை 624 ஆக உயர்ந்துள்ளது. ஒரு வருடம் சந்தா செலுத்தியவர்கள் தங்கள் சந்தாவை புதுப்பித்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம். மேலும் சந்தா செலுத்தாதவர்கள்,

**சந்தாவை செலுத்துங்கள், இதழ் தொடர்ந்து சிறப்புடன் வெளிவர ஆதரவு தாருங்கள்.**

பின்வரும் ஏதாவது ஒரு வழியில் சந்தாவை செலுத்தலாம்.

1. சந்தா - ரூ. 100/- (1 ஆண்டு) ரூ. 200/- (2 ஆண்டு) ரூ. 300/- (3 ஆண்டு)
2. ஆயுள் சந்தா - ரூ. 1000/-

நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் உதவலாம்.

1. ஆண்டு நன்கொடை - ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
2. ஆயுள் நன்கொடை - ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் "Sri Bagavath Mission" என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்க Cheque, D.D. அல்லது M.O. ஆக அனுப்பலாம். அல்லது, HDFC, Car Street Branch, Salem, A/c. No. 15907620000075, IFSC : HDFC 0001590 என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்
தலைமையகம், சேலம்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி

### பிப்ரவரி 25 வரை திருவண்ணாமலை முகாம்

ஐயாவை நேரில் சந்திக்க விரும்புபவர்கள் கீழ்க்கண்ட முகவரியில் சந்திக்கலாம்

108/21, T.S. R. நகர், யோகிராம் சுரத்குமார் ஆஸ்ரமம் மற்றும் அரசு கலைக்கல்லூரி விடுதி பின்புறம்,
திருவண்ணாமலை-606 603.

### 26-2-2013 முதல் 1-3-2013 வரை சேலம் முகாம்

தொடர்புக்கு செல் : 99942-05880, 97891-65555, 94432-90559

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 02-03-2013 | பாணிகிரஹா, 29, ஆர்யா கவுடா ரோடு, அயோத்தி மண்டபம் அருகில், வெஸ்ட் மாம்பலம், சென்னை-33. | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 5-30 to 8-00 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம் 98840-97438, 99520-71525 |
| 10-03-2013 | N.R.K. திருமண மண்டபம், பாளையப்பாளையம், இராஜபாளையம். | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 5-30 to 8-00 மணிவரை | திரு. சங்கரநாராயணன் செல் : 9790276206 |

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் வாழ்வில் உயர வேண்டும் என்று விரும்புகிறேன். எனக்கு விபரம் தெரிந்த நாள் முதல் பெரும்பாலும் யாருக்கும் கெடுதல் செய்தது கிடையாது. இருந்த போதும் வாழ்க்கையில் மிகவும் கடுமையான துக்கங்களையும், துயரங்களையும் அனுபவித்து வருகிறேன். இதற்கெல்லாம் என்னுடைய பாவப் பதிவுகளும், முன்ஜென்ம கர்மாக்களும் தான் காரணம் என ஆன்மிகப் பெரியவர்கள் கூறுகிறார்கள். நான் என்னுடைய கர்மாக்களையும் பாவப்பதிவுகளையும் எவ்வாறு எதிர்கொள்வது? எப்படி அதிலிருந்து விடுப்படுவது?

பதில் : வினைப்பதிவே தேகம் கண்டாய், பாவப் பதிவுகளுக்காகத்தான் பிறப்பு, கர்மா நிறைவடையும் வரை பிறவிகள் எடுத்துத் தான் தீரவேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் கர்மப் பதிவு உள்ளது என்பதை அறிய உடலில் நோய், உள்ளத்தில் களங்கம் இருப்பதைக் கொண்டு அறியமுடியும். கர்மா, வினைப் பதிவு, பாவப்பதிவு எனப் பலவாறாகக் கூறப்பட்டாலும் அதன் பொருள் ஒன்றையே குறிக்கிறது.

கர்மா என்பது பொதுவாக நாம் செய்த பாவச் செயல்கள் மற்றும் நம்முடைய முன்னோர்கள் செய்த பாவப்பதிவுகள் (தாய், தந்தை, தாத்தா, பாட்டி என முன்னோர்களின் வாரிசாக வந்திருப்பதால்) என வைத்துக்கொள்ளலாம். இவை அனைத்தும் நம்மிடம் பாவப் பதிவுகளாக பதிந்திருப்பதால், நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப நம்மிடம் பதிந்துள்ள கர்மாக்கள் வெளிப்படும்.

நமது கர்மாவின் தகுதிக்கு ஏற்றபடிதான், பெற்றோர், மனைவி, மக்கள், தொழில், உறவினர் என அனைத்தும் அமையும். மேலும் நமக்கு ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகள், குணங்கள், பிடித்தவை, பிடிக்காதவை, வாழ்க்கையில் சந்திக்கும் சூழ்நிலைகள் எனப் பெரும்பாலானவைகளுக்கு நமது கர்மாவே காரணம்.

அப்படி மேற்சொன்னவைகளை வைத்துப் பார்க்கும்போது எல்லாமே கர்மாபடிதான் நடக்கும் என்றால் நமக்கு அதை மாற்றி அமைப்பதற்கான வாய்ப்பே இல்லையா?

நிச்சயம் மாற்றி அமைக்கும் வாய்ப்பு உண்டு. அதற்கான வாய்ப்பு தான் ஆகாமிய கர்மா என்று அழைக்கப்படுகிறது.

சாஸ்திரத்தில் கர்மா மூன்று வகையாக கூறப்படுகிறது.

சஞ்சிதம் – ஒரு மனிதனுடைய மொத்த கர்மா ஆகும்.

பிராப்தம் – இந்த பிறவியில் நாம் அனுபவிப்பதற்காக எடுத்து வந்த கர்மா ஆகும்.

ஆகாமியகர்மா – நமது புத்தியைப் பயன்படுத்தி நாமாக நல்ல கர்மாவைச் செய்வதற்கான வாய்ப்பு தான் ஆகாமிய கர்மா ஆகும்.

நமக்கும் ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகள், நாம் சந்திக்கும் சூழ்நிலைகள் போன்றவற்றை நாம் உருவாக்கியது கிடையாது. அவற்றை மாற்றி அமைக்கும் சுதந்திரம் நம்மிடம் இல்லை. நம்மிடம் இருக்கும் வாய்ப்பு அந்த சூழ்நிலையில் நாம் புத்தியைப் பயன்படுத்தி நல்ல செயல்களைச் செய்யலாம். அல்லது பழைய கர்மாவின் இச்சைப்படி தவறான செயலைச் செய்யலாம்.

நமக்கு வாழ்வில் மாற்றம் வேண்டும், துன்பங்கள், துயரங்கள் நீங்க வேண்டும். பாவப்பதிவுகளை, கர்மாக்களை எதிர்கொள்ள வேண்டிய நாம்தான் புத்தியைப் பயன்படுத்தி நல்லவிதமான செயல்களாக ஆகாமிய கர்மாவைச் செய்யவேண்டும்.

நம்முடைய எல்லா கர்மாக்களுக்கும், பதிவுகளுக்கும் வாழ்வின் மாற்றத்திற்கும் நமக்கு இருக்கும் ஒரே வாய்ப்பு நாமாக நல்ல செயல்களைச் செய்வது மட்டுமே. நமது கர்மா நம்மைச் சோதித்து பார்க்கும். இவன் பழைய கர்மாவின் இச்சைப்படி பழைய தீய செயல்களையே செய்கிறானா அல்லது புத்தியைப் பயன்படுத்தி நல்ல செயல்களைச் செய்கிறானா என்று சோதிக்கிறது.

இந்த இடத்தில் ஓர் உதாரணத்தைப் பார்ப்பது நமது கர்மாவைப் பற்றிப் புரிந்து கொள்வதற்கு உதவியாக அமையும்.

நாம், இதுநாள் வரை சேர்த்துள்ள கர்மாக்கள் அனைத்தும் சேர்ந்தது ஓர் கறுப்பான கலங்கிய நீர் என வைத்துகொள்வோம். அந்தக் கறுப்பான நீர் ஒரு பாத்திரத்தில் முழுவதுமாக நிரம்பியுள்ளது. நடைமுறை வாழ்வில் நாம் எதிர்கொள்கிற சூழ்நிலைகளிலெல்லாம் முடிந்தவரை நல்ல கர்மாக்களைச் செய்கிறோம் என்றால் அது அந்தப் பாத்திரத்தில் உள்ள கறுப்பான நீருடன் நாம் செய்த நல்ல கர்மாவான சுத்தமான தண்ணீர் 1 டம்ளர் அளவு அந்தக் கறுப்பு தண்ணீருடன் கலந்துவிடுகிறோம். நமக்குக் கொடுக்கப்பட்ட வாய்ப்பான நல்ல கர்மாக்களை செய்து தினம், தினம் 1 டம்ளர் வீதம் சுத்தமான தண்ணீரையே அந்தக் கறுப்பு தண்ணீரில் கலந்துவிடுகிறோம். பாத்திரத்தில் உள்ள தண்ணீர் எவ்வளவு தான் கறுப்பாக இருந்தாலும் தவறு கிடையாது. அப்படித் தண்ணீர் கறுப்பாக இருப்பதற்கு நாம் மட்டுமே பொறுப்பு கிடையாது. நம்முடைய நல்ல செயலால் தொடர்ந்து நல்ல தண்ணீரை ஊற்றும்போது கறுப்புத் தண்ணீரின் தன்மை பாதியாகக் குறையவும்கூட வாய்ப்புள்ளது. இது மட்டுமே நமக்குக் கொடுக்கப்பட்ட வாய்ப்பு. மேலும், நல்ல செயல்களைச் செய்வதை ஒரு விரதமாக அனுசரித்து செயல்படுவோமானால் கர்மாவின் தாக்கத்திலிருந்து நிச்சயமாக விடுதலை அடையலாம்.

"தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்". - வள்ளுவர் (குறள்-619).

நம்முடைய கர்மாவினால் நமக்கு ஏற்பட்டுள்ள துன்பங்கள், துயரங்களைப் போக்க தெய்வீக சக்திகளின் உதவிகளினால் முடியவில்லை என்றாலும், நாம் விரதமாக எடுத்துச் செய்யக்கூடிய நல்ல செயல்களால் ஆன ஆகாமிய கர்மாவினால் அதற்கு உண்டான பலன் கிடைத்தே தீரும்.

மகாபாரதத்தில் கர்ணன் தன் வாழ்வில் செய்த புண்ணியச் செயல்களினால் அவனைப் போரில் அர்ஜுனனால் வீழ்த்த முடியவில்லை. கடவுளின் அவதாரமான கிருஷ்ணன் கர்ணனைப் போரில் வீழ்த்துவதற்காக "கர்ணா நீ செய்த புண்ணியங்களை எல்லாம் எனக்குத் தாரை வார்த்துக்கொடு" எனக் கேட்கிறார்.

கர்ணன் தான் இதுவரை செய்த புண்ணியம், மேலும் இப்போது செய்யும் இந்தப் புண்ணியத்தின் பலனையும் சேர்த்து இரத்தத்தால் தாரை வார்த்துக் கொடுக்கக் கிருஷ்ணன் பெற்றுக்கொள்கிறார்.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவென்றால் கர்ணன் என்ற மனிதனுடைய நல்ல செயல்களால் கடவுளின் அவதாரமாகக் கருதும் கிருஷ்ணனுக்கே கொடுக்கும் நிலைக்கு உயரமுடியும் என்பதைக் காட்டுகிறது.

எனவே நம் கர்மா எவ்வளவு மோசமானதாக இருந்தாலும் நாம், நாமாகச் செயல்படும் ஆகாமிய கர்மாவைப் பயன்படுத்தி நல்ல செயல்களைச் செய்வதன் மூலம் நம்மையும் உயர்த்தி இச்சமுதாயத்தையும் உயர்த்தமுடியும் என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

நமது வாழ்க்கை எத்தகைய துன்பங்கள் நிறைந்ததாக இருந்தாலும் சரி, அதைப் பற்றி நாம் கவலை கொண்டு இருப்பதால் எந்தப் பலனும் இல்லை. அதே நேரம் நமக்குக் கிடைத்த வாய்ப்பான ஆகாமிய கர்மாவை ஒரு விரதமாக கடைப்பிடித்து செய்யும்போது நிச்சயமாக வாழ்க்கையில் நாம் உயர்ந்த நிலைக்கு வருவோம் என்பது உண்மை.

"தர்மத்தின்முன் படைத்தவன் வலிமையும் பலிக்காது" - பகவத் கீதையில் கிருஷ்ணன்.

"ஆகாமிய கர்மாவின் அதிகாரம் நமது கைகளில் மட்டுமே உள்ளது. அதற்கான அதிகாரம் தெய்வத்துக்குக்கூட கிடையாது" - ஸ்ரீ பகவத் ஐயா

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942-05880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சகப் பயணியின் வணக்கம்,

பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் இனிய புத்தாண்டு மற்றும் பொங்கல் நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நமது பகவத் பாதைக்கு அன்பர்கள் பலர் ஆண்டு சந்தா, ஆயுள் சந்தா மற்றும் நன்கொடைகளையும் வழங்கி ஆதரவு கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

சென்ற மாத இதழோடு பகவத் ஐயாவின் கருத்துகள் அடங்கிய புத்தாண்டு காலண்டரை அனைவருக்கும் இலவசமாக அனுப்பி வைத்திருந்தோம். அதைப் பெற்ற பல அன்பர்கள் காலண்டர் மிகப் பயனுள்ளதாகவும் தரத்துடன் இருப்பதாகவும் தங்களது மகிழ்ச்சியைத் தெரிவித்துள்ளார்கள்.

சென்ற ஆண்டை விட இந்த ஆண்டு பகவத் பாதையில் பயணிப்பவர்களின் எண்ணிக்கை மிக அதிக அளவில் அதிகரித்துள்ளது. அதற்குத் தகுந்தாற்போல் காலண்டரின் எண்ணிக்கையைக் கூடுதலாக்கி அனைவருக்கும் சென்றடையவேண்டும் என்ற பெருநோக்கில், ஸ்ரீ பகவத் மிஷன் திருப்பூர் மையத்தைச் சேர்ந்த நமது நண்பர் திரு. சேகர் என்கின்ற அருள்பிரகாசம் அவர்கள் ( செல் : 9944044988 ) தன் சொந்தச் செலவில் பிரிண்ட் செய்து அனைவருக்கும் இலவசமாக வழங்கியிருக்கிறார்கள். நமது அனைவரின் சார்பிலும் அவருக்கு நன்றியையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்தக் காலண்டர் மூலம் பகவத் ஐயாவின் ஞானத்தைப் பற்றிய புதிய அணுகுமுறையை தேடுதல் கொண்ட பலருக்கும் தெரிவிப்பதற்கு ஒரு வாய்ப்பாக இருக்கும் என நம்புகிறோம்.

இதுவரை ஆன்மிக வாழ்க்கை வேறு, உலகியல் வாழ்க்கை வேறு என இருவேறு பிரிவுகளாக இருந்து வந்தன.

யதார்த்த வாழ்வான உலகியல் வாழ்க்கைக்குப் பயன்தராத ஆன்மிகம் உண்மையில் பயனற்றது.

யதார்த்த வாழ்வோடு இணைந்த ஆன்மிக வாழ்வே முழுமையானது.

பகவத் ஐயாவின் ஞானத்தைப் பற்றிய இப்புதிய அணுகுமுறையினால் யதார்த்த வாழ்வையே ஆன்மிக வாழ்வாகவும் மாற்றியமைத்து நிறைவான வாழ்க்கையை நம்மில் பலரும் வாழத்தொடங்கியிருக்கிறார்கள்.

இந்த உண்மை தெரியாமல் வாழ்வில் தேடுதலோடு தவித்துக்கொண்டிருக்கும் பலருக்கும் இவ்வுண்மையைக் கொண்டு சேர்ப்பதே நமது வாழ்வின் இலட்சியமாகக் கொண்டு செயல்படுவோமாக.

வாழ்த்துகள்.

அன்புடன்,

**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஸ்ரீ பகவத் ஐயாவின்

## "ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்"

எனும் புதிய நூலைப் பெற தேர்ந்தெடுக்கப்படும் விண்ணப்பங்களுக்கு, பிப்ரவரி மாத இறுதிக்குள் இப்புதிய புத்தகம் அனுப்பி வைக்கப்படும். பல அன்பர்களிடம் இருந்து விண்ணப்பங்கள் வந்துகொண்டு இருக்கின்றன.

இந்நூலைப் பெற விரும்புவர்கள், நூல் பெறுவதற்கான விண்ணப்பப் படிவத்தைக் கீழ்கண்ட முகவரிகளில் நேரில் சென்று பெற்றுக்கொள்ளலாம், அல்லது **www.pravaagam.org** என்ற இணைய தளத்திலிருந்து **download** செய்துகொள்ளலாம். **www.sribagavath.org** என்ற இணையத் தளத்திலிருந்து ஆன்லைன் மூலம் விண்ணப்பிக்கலாம். தபாலில் பெற விரும்புபவர்கள், முகவரிகளில் கீழே கொடுக்கப்பட்ட அலைபேசி எண்களுடன் தொடர்பு கொண்டோ அல்லது SMS மூலமாகவோ தங்களின் முகவரியை தெரிவித்துப் பெற்றுக்கொள்ளலாம்.

பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பம் அனுப்பவேண்டிய முகவரி :




ஸ்ரீ பகவத் மிஷன், தலைமையகம்,
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 9994205880, 9443290559, 9789165555.

விண்ணப்பம் கிடைக்கும் இடங்கள் :

1. ஸ்ரீ பகவத் மிஷன்
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 9994205880, 9443290559, 9789165555.

2. ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, Old Bank of Baroda Street,
Secretariate Colony, Ambattur, Chennai - 600 053.
Cell : 9884097438, 9952071525.

3. ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல்.
செல் : 9360579181, 9360110755, 9787253751

4. ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

5. ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்-636 004.
செல் : 9488694453, 9894377433, 9443290559

6. திரு. R. ஆனந்தகுமார், கோவை
1548, திருச்சி ரோடு, விவேகாலயா பள்ளி எதிரில்,
ரிச்மான்ட் ஹாஸ்பிட்டல் அருகில், கோவை.
செல் : 98422-31582.

7. திரு. சரண்குமார், திருச்சி
ஜென் சங் அக நூலகம், 450, பெரியகடைவீதி,
லட்சுமிவிலாஸ் பேங்க் அருகில், திருச்சி-8.
போன் : 0431-2701239, செல் : 98940-12639

## மண்ணின் தவம் - மரங்கள்

பூமியின் தோற்றம் பற்றி பல நியதிகள் சொல்லப்பட்டு வந்தாலும், பூமியின் படைப்பின் நியதியில் தாவரங்கள் மூன்றில் ஒரு பங்கு இருக்க வேண்டும் என்பதே! ஆனால் இன்றைய நிலையில் சிந்தித்தால் நம் மனம் மட்டும் அல்ல, மண்ணும் கலங்கித்தான் போகும். ஏனெனில் நம் பூமியில் தோன்றிய முதல் ஜீவராசியே பாசிகள் என்னும் தாவரம் ஆகும். அன்று தொடங்கி இன்று வரையுள்ள அனைத்து ஜீவராசிகளுக்கும் அச்சாணியாக விளங்குவது தாவர இனங்களே ஆகும்.

இன்றைய நிலையில் பூமிக்கு ஏற்படுத்தப்பட்ட ஆபத்துக்களில் முதல் இடத்தில் இருப்பது தாவர இனங்களின் அழிவே ஆகும். இச்செயல்கள் அனைத்திற்கும் காரணம் நம் மனித இனமே! இதனை தற்போது தான் உணரத் தொடங்கியுள்ளனர்.

இதன் விளைவாக உலக அளவில் மரங்கள் நடுவதற்கான விழிப்புணர்வு ஏற்படுத்தப்பட்டு வருகிறது.

குறிப்பாக ஐ.நா. சபையினால் 2006-ஆம் ஆண்டு முதல் உலகம் முழுவதும் 700 கோடி மரங்களை நட முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இதில் 300 கோடி மரங்களை ஐ.நா. சபையே உலகம் முழுவதும் நடவு செய்துள்ளது.

ஐ.நா.வின் இச்செயல்பாட்டினை செயல்படுத்தியதில் :

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் இடம் | - | எத்தியோப்பியா | - | 72.5 கோடி மரங்கள் |
| 2-வது இடம் | - | துருக்கி | - | 70 கோடி மரங்கள் |
| 3-வது இடம் | - | மெக்சிக்கோ | - | 47 கோடி மரங்கள் |
| 4-வது இடம் | - | கென்யா | - | 14 கோடி மரங்கள் |
| 5-வது இடம் | - | கியூபா | - | 13 கோடி மரங்கள் |

மேற்கண்ட புள்ளி விவரங்களை நோக்கும்போது உலகில் பொருளாதாரத்தில் பின்தங்கி காணப்படும் நாடுகளின் விழிப்புணர்வு, வளர்ந்த நாடுகளிலும், வளரும் நாடுகளிலும் மிக குறைவே எனலாம்.

இந்தியாவினை பொருத்த அளவில் 33% சதவிகிதம் காடுகள் இருக்க வேண்டும் என்பதே இயற்கையின் விதி. ஆனால் இருப்பதோ 18% சதவிகிதம் மட்டுமே. மீதியுள்ள 15% சதவிகித்தத்தினை பூர்த்தி செய்ய 154 கோடி மரங்களை நாம் நடவு செய்திட வேண்டும். இத்தகைய இலக்கை எட்ட அரசாங்கம் தீட்டும் திட்டங்கள் மட்டும் போதுமா?

இந்த பூமியில் மனிதனாக பிறந்த ஒவ்வொருவரும் மரம் வளர்க்க வேண்டியது முதல் கடமையும், தர்மமும் ஆகும்.

வாருங்கள் நம் கரம் கோர்ப்போம் - வனம் உருவாக!

R. MURUGESAN - Cell : 97875-37631
RICH FARMER TREES PLANTATION (P) LTD.,

# ஜென் கதை
## "நீயாக இரு"

புகழ்பெற்ற ஜப்பானிய சாமுராய் வீரர் ஒருவர் இருந்தார். ஒருநாள் கடுமையான போருக்குப் பின், தன் வீட்டில் களைத்துப் போய் படுக்கப் போகும் போது ஒரு எலியைக் கண்டார். அவரை முறைத்துப் பார்த்த அந்த எலியை ஒரே வெட்டாக வெட்டி போட தம் வாளை வீசினார். அது தப்பி விட்டது.

மிகச் சிறந்த வாள் வீச்சு வீரரான அவர் பலமுறை முயன்றும் எலியை கொல்ல முடியவில்லை. பலபேரை போர்க்களத்தில் வென்ற அவரால் ஒரு எலியிடம் தோற்றுப்போவதை சகித்துக் கொள்ளமுடியவில்லை.

அவர் தம் மனைவியிடம் நடந்ததைச் சொன்னார். "சுத்த முட்டாளாக இருக்கிறீர்களே! யாராவது எலியை வாளால் வெட்டுவார்களா! ஒரு பூனையை வளர்த்தால் எலி வந்துவிடுமா?" என்றாள்.

உடனே தளபதி ஒரு வீரப்பூனை ஒன்றை வரவழைத்தார். எலி பிடிப்பதில் புகழ் பெற்ற அந்தப் பூனை எலியின் மேல் பாய்ந்தது. அந்த தந்திர எலி பூனையின் முகத்தின் மேல் பாய்ந்தது. தன் விழிகளை கீறி விடுமோ என்ற பயந்த அந்தப் பூனை தப்பி ஓடியது. தளபதி அதிர்ந்து போனார்.

உடனே அரசப் பூனையை வரவழைத்தார். ராஜதந்திரங்கள் பல செய்தும் அரசப் பூனையால் அந்த எலியை பிடிக்க முடியவில்லை.

"சாதாரண ஊர்ப் பூனையை அழைத்து வந்து பாருங்கள்" என்றது அரசப் பூனை.

"சாதாரண பூனையால் என்ன செய்துவிட முடியும்" என்றார் தளபதி.

"முயற்சி செய்து பாருங்களேன். பெரிய வீட்டுப் பூனைகள் எல்லாம் நன்றாக சாப்பிட்டுத் தூங்கும் பழக்கம் உள்ளவை. அவைகளுக்கு ராஜ தந்திரம் தெரியலாம். ஆனால் எலி பிடிக்கத் தெரியாது. ஏனென்றால் அந்த பூனைகளுக்கு அதற்கான வாய்ப்பும் இல்லை, பயிற்சியும் இல்லை, பசியும் இல்லை. ஆனால், சாதாரண வீட்டுப் பூனைகள் பசித்து அலைபவை. எலி பிடித்து உயிர் வாழ்பவை. அவற்றிற்கு எலி பிடிக்கும் எல்லா உத்திகளும் நன்றாகத் தெரியும்" என்றது அரசப் பூனை.

தளபதியும் அவ்வாறே செய்தார். ஆனால் அவருக்கு துளியும் நம்பிக்கையில்லை. அறைக்குள் அந்த சாதாரண பூனையை விட்டார்கள். அடுத்த நிமிடம் எலியைக் கவ்விக்கொண்டு வெளியே வந்தது, அந்த சாதாரண பூனை!

எல்லா மேலிடத்து பூனைகளும் ஒன்று கூடி, "உன் கலைத்திறமை என்ன?" என்று கேட்டன.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நான் பூனை அவ்வளவுதான். நீங்களும் பூனையாக இருங்கள்" என்று கூறி ஓடி மறைந்தது, அந்த சாதாரணப் பூனை.

உன் இயல்பை மறைத்து வெளி வேஷம் போடாதே. உன் இயல்பில் வாழ்வதே ஞானம்.

"உன் இயல்பு தான் நீ,<br>நீ நீயாக இரு"




ஜென் கதை 'நீயாக இரு'

நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

*If undelivered please return to:*



Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu, INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.